நீறியேபொடிபோல்சுட்ட சாம்பலைப்புடைத்துக்கூட்டி
வேறுள்ளபொறிமையெல்லாம் பொரிக்கினீ கலவத்தாட்டி
நூறுதான் புடத்திற்போட நிகரில்லாவெள்ளையாகும்
வீறுதானஞ்சிமேகம் விட்டோடி மடைத்துக்கொள்ளே. 150

## வங்கபற்பம்

கொள்ளுமேவங்கநீற கூறுநேறன்யெட்டுநொச்சி
கிள்ளுமென்சாரணைவேர் கிழக்காயுநெல்லிபெள்ளு
துள்ளுமேரசசுன்னத்தில் துடியுடன்குருவுங்கூட்டி
யுள்ளுமேபுடத்திற்போட வொக்கவும்வங்கநீறே. 151

## பற்பங்கள் நிறம்

நீறிருத்தப்படியெல்லாம் நிறமதுவெளுப்பேயாகும்
இவறிந்தவெளுப்பையெல்லால் வேற்நிறம்பற்பமில்லை
கூறிந்தத்தங்கமாத்திரங் குலம்பொய்யர் நிறமுமஞ்சள்
வாறிந்தப்படிபேயெல்லால் மற்றெல்லாமருட்டுதானே. 152

## வயித்தியர்க்குப் புத்தி

வேறு.

தமனென்றவயித்தியர்தாக் தவமொன்றில்லைத் தருத்மதுக்காக் வல்லோ சொல்லிப் போட்டோம் - மூனென்றவுடலறிந்து தாதுபார்த்து ஓகோகோ மருந்து செய்தாலூனும்பாரு - கோனென்ரதுரு பதத்தை யடுத்துக்காத்துக் கூறினதைபெய்யென்று காட்டாயானல் - நானென்ற சொல்லும்விட்டு பொழிந்துதானல் நல்லறிவுயுகம்போயுமழியாதன்றே.

அறியாமல் பண்டிதந்தான் கெட்டுப்போச்சு ஆகாகாசெந்தூரங் கறுத்துப்போச்சு-பிறியாத தயிலமதையெறிக்கலாச்சு பேய்மக்காள் நூல்களைத்தான்விரித்துப்பாரு - குறியானகுளவியல்லோ புழுவைக்கவ்வி கூடமைத்துக் கொட்டினைவேறேரூபம் - நெறியான சாஸ்திரந்தான் குருவேயாகு நித்தநித்தம் பார்த்தவர்க்குநேர்சொள்வாளே.



## தயிலப்பேர்

சொல்லிவந்தவயித்தியந்தான் ரன்டிலக்ஷந் தொகைபதிலே தயில மது கோடாகோடி - சொல்லினதோர் தயிலத்தில் நாலும்போலே சூட் சயில்லைமற்றதெல்லாஞ் சுறுக்குமெத்த - சொல்லுமேறனுக்குமேக ரா சாங்கஞ் சொற்பெரிய வேலாதி சந்தனாதி - சொல்லியதோர் விஷமுட் டித்தயிலம்நாலும் தொகைநவறாவைத்தவன்றான் பிர்மாவாமே.

## தயிலமாகந்தப்பிவருங் குறிகள்.

வாயிந்தத்தயிலங்கள் வைத்தயானால் மருந்து தொகை யெடை பாகஞ்சரியானாலேற்கும் - போயிந்த மருந்து குறையெண்ணெய் தானும் போல்லாதுமருந்துமீறில் காறமெத்த - ஏயிந்தயெண்ணெய்மீறில் தயில மெறக்கவென்மகனே நாட்செல்லு மெல்லார்க்குந்தான் - யாயிந்தத் தயிலத்தில்மருந்து மீறிலதை மூழ்கில் சிரம்வாளுமரிக்குபாரே. 156

வரண்டிருமியுளையுண்டாம் பாதமேகம் வளர்பித்தங்கூடிநின்றால் சயமேகாணும் திரண்டுநின்ற நீர்விஷங்கள் சூலையாச்சு சிரத்தில்நின்று குத்துதல்தான் காசமாச்சு - பிரண்டசிலேற்பனத்தில் வாதம் புங்கில் பித்தர்களே நீரிழவு பெருத்துர்காணும் பிரண்டபல வாதபித்தமைய மீறில் பிரபலமாய்ச் சளம்வருகுஞ்சன்னிதானே. 157

சனம்வருங்காணறிந்து பின்னைசெய்யானாகில் சக்கியிலே கல்லெறி ந்தவாறேபோலாம் - தளமறிந்துயினமறிந்து சாத்திரமும் பார்த்துத் தாயைநித்தம் பூசித்துத்தனித்திருந்து - வளர்பெறவே மானதமுந் - தி யானஞ்செய்லாம் வழிப்பாடு கூடமெல்லால் மற்றோர்க்குத்தான் - களந் தனிலேதுவரைபடி சிதறிப்போம்போல் கண்டதெல்லாம் பின்காணு தோடிப்போமே. 158

## பூசைகுணமகத்துவங்கள்

போமப்பாபூசையில்லாபா தகர்க்குப் பொருளோடு யிருளுமில்லை புலையனவார் ஆமப்மாபதினெண் பேர்பூசைசெய்தார் ஆத்தாளுமவர் களுக்கு அருளிச்செய்தார் காமப் பாகலியுகத்தில் மிஞ்சிப்போச்சு காண்பதில்லை கனவிலுமே யொளித்தாளென்றாய் ஏமப்பா வென்றாக் கால் சொல்லக்கேளுயே கபாமுண்டென்று பூசிப்பாரே. 159

பூசையிலே ஆண் பெண்கள் வெகுபேர்கூடி பொய்க்கூத்தால் குடித்தவெறியாலே காமம் ஆசையிலே தத்தளித்து வரம்பில்லாமலடி பிடியும் வாய்குளறி சண்டையிட்டுப் பேசையிலே கண்மூடி ஓங்காத்துப் பெண்பிள்ளையின்று றென்றறிவிலாமல் வாசையினால் தீனிரம்பதின்று ஆனைவையகத்தில் பூசையிது பெருத்துப்போச்சே. 160

பெருத்திந்த கலியுகத்தில் சித்தர்கொஞ்சம் பிரபலகர்வாதி மெத்தமயங்கி செர்த்தார் வருத்தமிக வந்துவிடுந் தீனியாலே வாய்க்கு நமகோடிதனக் கொன்றேசித் தாம்நித்தமிடு மாயுந்தான் மறைந்து போனாள் நெஞ்சுரையா வஞ்சகர்செய்த நிட்டேசத்தால்திருத்தமாய்க் கலியுகத்தில் பூசையொன்று செப்புகிறேன் திருநடன வொளிரிமாமே

ஒளிவானபூசையடா வாதிக்ககாகு முத்தமமாம்வயித்தியர்க்காம் ஞானிக்காகும் - பழியில்லாதமாந்தருக்காம கற்பாதிக்கும் பாஷானசித் தருக்காமவுனிக்காகும் சுழிமேலே பூரணத்தைப் பார்த்தோர்க்காகும் சுருதியிலே வாசியிலே நாட்டாலாகும் வெளியானமே லோர்க்குமா காதிந்த வேதாந்த ஆயுடபாதந்தானே. 162

பாதத்திலர்ச்சிக்கவகையைக் கேளுபதியான யில்லறத்தை சுத்தி பண்ணி போதமேற்ற மவுனத்தில் மனதைவூணிப் பொற்கொடிக்கும் வாணிக்கும் பூசைபண்ணி பேதையர்கள் கலியுகத்தில் பூசைக்காகா பெண்ணாலே சதுர்யுகம்நாலும்பாழாய் வாதமுதல் மருந்து மணிமந்தி ரஞானம்வாசியோகசமாதி நிஷ்டைகற்பம்போச்சே. 163

கர்மாளிகளுக்கு மிந்தப் பூசைவாயாகற்பசித்தி வாதயோகசமாதி நிஷ்டைவர்மாளி ஞானமணிமருந்து மந்திரம்வாயாது சாவதிரங்கள பதினெண்ணூறாம் தூர்மாளி ஆனந்தலகிரி பூட்டி தொடர்ந்தேறிப் பூரணத்தைப் பாரானே யோதர்மாளி முன்னேவிட்ட குறையினாலே சகலசித்தாங் கைவசமாம் பூசைசெய்யே. 194

பூசையிலே நாலுவிதமுன்றுகேளு புகழானவாடத்தில் மவுன பூசை பூசையிலே ஞானகுருதியானபூசை பூரணத்தைப் மார்த்திரு ந்தாலகிரிபூசை பூசையிலே சக்கரமும் புஸ்தகமும் புகழ்பெரிய யந்தி ரமுஞ் சிலையுஞ் செய்து பூசையிலே காலுவித லகிரிபூட்டி பெண் பிள்ளைபலர் கூடில்கிரிகையாமே. 195

ஆமப்பா லகிரியிலே யனேகமுண்டு ஆனந்தலகிரியப் பாவமூர்த்த பானம் ஆமப்பா கோரக்கர் முனிதன்னிலதுநாலு முதந்தரந்தான நீத முத்தி ஆமப்பா நாலுவித மறியவென்றுலப்பனே லேகிய முத்தி சூரணமும் பாணம் ஆமப்பா குடிக்கிறது நாலாம்பட்சம் அதுவிட்டால் வின்னுமொருலகிரியாமே. 166

லகிரியாவேஸ்துபான முத்திமுத்தி நட்பினுவொண்டுமெய்து மறிந்து கொள்ளுலகிரியடா நீச்சருக்காம் கள்ளுவாசம் நாடாதேகால்வழியுமறிந்து சொன்னோம் லகிரியடா மனவரக்கால முட்டநாக்குநுனி மேலவாசலூடு தாக்கிலகிரியடாமமுந்த கனவருந்துங்கும் பிறகனி தேன்குடமுடைந்தவாறும்பாரே. 167

ஆறுகுஞ்சமயங்களுள்ளும் பின்னும் அவதரித்த சமயத்திலுட் சமயம் வாமம்பேறுகின்ற நிலைதவறிவிட்டால் புரசமயத்தோர்க்கு மடாபேய்போலாடும் வேறுகுஞ்சேதியெல்லாய் விரிந்துச்சொன்னேன் வெட்டவெளியாகுமடா நூலைப்பாரு ஆறுகுந்தர்ச்சனரோடிணங் காதையா துலையாத பாவம்வரும் வாமத்தாலே. 168

வாமத்தாலட்டகர்மமெட்டுமொரும வாதமெடு மணிமந்திர மருந்துஞ்சித்தி சேமத்தல்சிவனெடுமால்சத்தி தேவர்நினைத்ததெல்லாந் தியானிக்க விரதங்காக்க சாமத்தில் வயிரவனைத் தாயைபோற்றி தனிந்திருந்து சிவஞ்செய்தத் தருவார்சித்தி காமந்தால்லலையாதே சோல் லக்கேளு காமகேசரிதன்னைக் கட்டிக்கொள்ளே. 169

## காமகேசரிகுளிகை

கட்டுவிடிவிந்துதனை யணைந்தாலுந்தான் காமத்தால்செனித்த விந்துயல்லா லில்லை-தொட்டவுடன்விந்துதுடை வழியேயோடில் துன்மம்வரும் விந்தழிவுவந்தால்கேளு வெட்டிவிடு மருந்திதுதான் வேறே யில்லை வித்தெல்லாம்விந்து வல்லாதுண்டோ சொல்லு - திட்டமிது செய்தநிந்தவித்தை சொல்வேன் தேகத்தில் விந்து நஷ்டம்வரலாகாதே. 170

ஆதியென்றவிந்துவுக்கு அழிவுவந்தால் அரனாலு மரியாலுமுடியாதையா பாதியென்ற பெண்ணுமங்கே மனதுலேவும் பக்குவத்தில் சஞ்

சரித்தால் புத்திரருண்டாஞ் சாதியென்றதிருவகைக்கும் விந்துதெய்வஞ்சஞ்சாரமிஞ்சிட்டால் மேகமுண்டாம் வாதியென்றால் சடலத்தைப் பேணுவானென்பார் வயித்தியந்தா னறுநூற்றில் மருந்துபாரே. 170

பாரிலுள்ள வித்துவகை நெல்விதைத்து பருத்திவித்து பீசங்கம் பம்பைவித்து ஊரிலுள்ள சூரிவித்து முருங்கைவித்து யுற்றகஞ்சா வித்துடனே செம்முள்ளிவித்து ஏரிலுள்ளபரசம்வித்து யமுக்குரு வித்து திருவாத்திவித்துடனே வில்வவித்து - நீரிலுறள்யோரிதழு நீர் முள்ளிவித்து நெரிஞ்சிவித்து முள்ளிவித்து ஆவரைபின்விதையே.

வித்தானமுசுமுசுக்கையகத்திவித்து விரோசனமாம் புரசம்வித்து முசுட்டைவித்து-பத்தனையவுரிவித்து சண்ணடவித்து யாலம்வித்தும் வித்துயாமணக்கவித்து-சித்தாளவூமத்து சிறுபூனைக்காலி செய்தகரை கற்றாமரைதினை சுவையிலவித்து - முந்தானைதிப்பலியும் கருவேலப் வித்து மூலிலைபாயின்னிமகிழ்வன்னிவித்தே 173

புன்னியமருந்துடனேயகத்திவித்து வளர்பலத்தின் பனைகிழங்கு கூடவேதான் கன்னியாகரிக் கருணைபுளிகடலைவேருங் காட்டில்வளர் கருணையுடனருநேண்டிக்கிழங்கு சென்னியாமரம்பைமுலம் புல்லிக்கொட்டி சிறுகிழங்குவசம்ப்ரவள்ளி மேவையப்பைக் கிழங்கு - பொன்னியா முந்திரிகை பரிசுச்சமுத்திராப்பூசினிக்காய் விலயத்தின் பழச்சதையுமாமே. 175

சதையானவாழைவிளா முருங்கைவேல்வேம்புகனி யிலவம்பிசினுடனே சாதிக்காய்பத்திரி - விதையானதேற்றானுஞ் சிவனார்வேம்பு விழுதிவித்துஞ் சிவந்தநாயுருவிவித்து சிதையாகையமுதலவள்ளி சுத்திசெய்த மாவும் சீனிபோலிகற்கண்டு சக்கரையுஞ்சமனைப் - பதையானகூகை நீர் குருசானிருந்தாரிக்கர் படளமுந்து வெள்ளிவாம்புரஞ் சொற்னபற்பமஞ்சே 175

அஞ்சுபேவகைக்குயொருகழஞ்சாய்த்தூக்கி யப்பிரேகச் செந்தூரங் கழஞ்சியுநில்சேர்த்து-மிஞ்சாமல் விரைபிசினுங் கிழங்குமாவு மீறுமல் வகைக்கு ஒரு கழஞ்சாய்த்தூக்கி டஞ்சிவபருங்கஸ்தூரி குங்குமப் பூகாரமருள் பூவுங்கோரோசனை கொண்டோசனை கிழங்கு தஞ்சசடாமவுஞ்சிசந்த தேவதாரம் கோஷ்டந்தாளிசமக்கிராக கொம்பாத்தை பச்சை. 176

பச்சையாம்வங்காளப்பச்சை பூலாக்கிழங்கு பரிவாகச்சரக்குவகை கழஞ்சாகச்சேர்த்து - கொச்சையாம்வெள்ளாட்டுப்பால் நனையவிட்டுக் கோதில்லாத்திடத்துமை போலுருட்டிக்கொண்டு - நச்சையாம் பற்பஞ் சுஞ் செந்தூரித்து நானிலத்தில் மருந்தையெல்லா மிடித்துக்கொண்டு இச்சைபெறக்கல்வத்திலிளநீர் தேங்காய் பாலுமிரு சாமமரைத்தபின்பு ஆவின்பால்வாரே. 178

வார்த்தரைப்பாய்க் கன்னியர்கள் மூலைப்பால்சாம மைந்தனே மூதண்டக்கியாழஞ்சாமம் - சேர்த்தரைப்பாய் கன்னலின்சாறு சாமஞ் செயமான கெடுப்பைவேர் கியாழஞ்சாமம்-பார்த்தரைப்பாய் பன்னீரில் சாமம்மாட்டுப்பரிவான மலர்க்காயின் கியாழத்தாலே- ஆத்தநன்றுயரைத் துல்லாத்திப் பொடியதாக்கி யப்பனே திரும்பவுந்தானரைக்கக்கேளே. 179

கேளப்பா பொடிதனைக்கல்வத்திலிட்டுக் கொடியான முந்திரிகை விட்டுநன்றாய் - பாளப்பாமெழுகுபோ மரைத்துமேதான் பக்குவமாய் மிளகுபோலுருட்டிக்கேளு - ஆளப்பாகடல்போற் நிழலுணர்த்தியழகான வெள்ளியுட சிமிழில்வைத்து - வாளப்பாநவசாயல்விவர்த்திசெய்து வசமாக மோகினியைத்தியானஞ்செய்யே. 167

செய்யவேபசும்பாலில் குளிகைரெண்டு செபமாக நாளொன்றுக் கிருநேரந்தான் - பையவேகொண்டபின்பு பாற்சோறுண்டு பாலகனே புகையிலையும் புளியுந்தள்ளு - அய்யவேநாளொன்றுக்கனுபோகிக்க அறுபதுபேர்பெண்களிலுமடங்காதப்பா - விந்துசையோக விந்துமுளை சிறசிலேறுஞ் சார்ந்தமுண்டமிதுகாமகேசரியே. 180

சரியாக யிதற்கீடு வொன்றுமில்லை தாதுவிர்த்தியில்லாவிட்டால் சடலம்போச்ச - மரியான விந்துவதுசிரசிலேற மகத்தானகுளிகை யிதுவளமாய்ப் பண்ணு- அரிதான மங்கையரும்குளிகை கொண்டாலா யிரம்பேர் சேர்ந்தாலுமடங்காதப்பா - தூரிசானராசகுளிகை போலே யாருஞ் சொர்னம்போல் தேகமுமாம் துரைமதனவேளே. 181

மேளென்னவுனக்கீடோ தம்பனந்தானென்ன வெகுசுருக்கு வெகுசுருக்குத்தம்பனந்தான் - ஆளென்னபெண்களைத் தானனுபோகிக் கிலடுத்துடனே விந்துவிழுமிவைமனம் வேறும் - நாமென்னகுளிகை செய்து அனுபோகித்தால் நழுகாது விந்துவதுநளினமெத்ததேனென்ற விந்துவது தம்பனமேயானால் செகத்திலுள்ள மாதர்களுந் வசமாவாரே. 182

வசமானமாத்திரையைப் பாலில்கொள்ள மானிடர்குத்தீரும் நோய் சொல்லக்கேளு நிசமான மேகமிருபத்திலுலும் நீர்ச்சுருப்பு வெள்ளை ரத்தம் பின்னெரிவுகாந்தல் விசனமான நீர்கரப்பான் படர்வெளுப்பு விரிவுபத்தும் விஷவாதமேகவய்வு தசவாவு அஸ்தியிலே பாய்ந்த வெட்டை தேகபித்தநீர் வேர்வைதாகம்போமே, 183

தாகமென்ற தாகமெல்லாமடங்கிப் போகுந் தாது நஷ்டமாகிவிடு மனுபோகித்தல் போகமென்ற விந்துவது ஊறும் ஆறு பொறியான அஸ்தியெல்லாங் குளிர்ந்துபோகும் வேகமென்ற சூலையெல்லாம் விஷநீராலே மெய்பழுத்தபாண்டுசோகை விஷநீராலே தேகமதிலெரிப் பிரு மல்சக்கசய ரோகந்திமிரு குஷ்டங் நவமூலம் வெருமேகத்தாலே

## விஷநீரால்வியாதிகள்

மேகந்தான் வாரிபிலேசலத்தை யுண்டுமேதினியில் பொழிதந் பின்பு சிலசெந்து ஆகமுமாம் நால்வேதமாறு சாஸ்திரம் அங்கங்கே நடப்பினாறும் மூர்வனது மாச்சுவேகமதாய்ப் பர்ப்பினதும் சேர்ப்பினமு மாச்சுவெரு உந்தத சொல்லவமோ தொகையுங்காலேன்ன போகமை போக மெல்லாந் திணியிலே பொல்லாத அண்ட பிண்டஞ் சரிதான் பாரே. 85

சரியாக மேகத்தால் பானவாய்வு தான்புகைந்து மேலேறி கபால ச்சூடாம் - பெரிதான மேகத்தாலஸ்திவெந்துபோமப்பா தசைவெந் தூரத்தம்வற்றி - பிரிவாகிதசவாய் வாமைந்தங்கொண்டு பெருக்கினி மலபந்தமுதானவாய்வு - விரிவாகித் தேகமெல்லாம் விஷநீராலே மெய் பழுத்துமென்றதிருபதாச்சே, 186

ஆச்சிந்த மேகத்தாலைந்தக்கோடி ஆனைபிறல் நரம்புக்கோர் வியாதி ஆச்சுதேதச்சிந்ததசவாய்வால்வாத மேகத்திமிருபத்துவிஷநீரால் சயமிரும்பல்காசம் வாச்சிந்த பித்த வாய்வுகபாலத்தேறி வளர்வேகம் வெள்ளைரத்தமக்கினியின் மந்தம்பேச்சினித்தானே ஜவையோ சிலேற் பனத்திங்மேகம் பெருத்தாக்தம் வற்றிவிடுக்கிறாணிபாண்டே, 187

வத்திவிடுமேகத் தாலஸ்திவெந்து வாண்மே நாடியெல்லாம் பாகி பற்றி - அஸ்தியுட்குன்றுத்த மெல்லாம்வற்றிவற்றி ஆகாசபுகைக்கேறி

வேர்வதாகி -சத்தியுமாங்கிடாவு மாமேகமப்பா கண்ட கண்ட நோய்
களெல்லாமேகராசன் - மத்தியத்திபாய்க் கட்டுக்குதிரைபோலப்பட
ரான நோய்களெல்லாம் வருகும்பாரே. 89

வருகுமேனாதமேக நாவிணலை வாய்வடைப்பு நீர்க்கடுப்பு சிறப்
போடு பொருமல் பெருகுமே கல்லடைப்புத் தசையடைப்பு வீக்கம்
பின்வருமே வாதசயம் வாதபாண்டுகாசம் சருகுமேபித்த மேகமாறுங்
கேளு சதாநித்தியமண்டையிடிக பாலவாய்வு பொருகுமே யொரு
புறத்திலிடிலங்காணும் புண்ணாகி வெள்ளை விழும் பூவிலையிற்கிரந்தி,

இலைகசக்கி வெயிலில்வைத்தபாவனைப்போல் தேகமென்ன சொ
ல்வேன் வெகுகோடி கரப்பனப்பாதலைசொரியும் விஷநீரால் மயிருதி
ரும்பாருதாக மென்னவியர்வை யென்னதலைசுழற்றும் வாந்திகலைபு
மே வாய்வோடி பித்தங்கூடி கண் மாசிபடர்ந்தாற்போல் கண்ணிமையும்
புண்ணும் வலைகட்டி மீன்பிடித்தான் போலாங்கேளுவனுவழுப்பா
ஞ்சிலேற்பனத்தின்மேகம்பத்தே, 190

பத்தானசிலேற்பனத்தில் மேகங்கேளு பாசிபத்தும் நெஞ்சுக்கு
ள் கபமிரும்பல் கோழை சத்ரகுஞ்சத் தாக்குள் யேளைப்புக்காணும்
சதா நித்தம்வெள்ளை விழும்மூத்திரத்துமுன்பின் வித்தாகவளர்ந்
து தடாகாசமாறுமென்மேலும் வேர்வையுமாம் விஷநீரமலேசத்தாவே
தஞ்சமென்று சட்டியொன்றுவைத்து காரிநம்பல்தும்பி நித்தங்கழியு
ம்வாறே. 191

கழிவாகுந்தேகமப்பா காணக்காணக்தசவத்தாய் வற்றிவிடுமென்ன
வாசங்கேழ்க்கில் - பழிகாரர் முகத்திலினிமுழியார்போலே பாண்ட
மெல்லாம் வெளுக்கடித்து ரத்தம் போக்கிசனிபாகி யடிக்கடிதானீரே
யேற்றுஞ் சரசாத்து உடம்பெல்லாம் பற்றிவீழும் கழிபாகிநாளிலேத
டித்துப்போட்டால் கட்டிலே புண்ணாகி சீழுமாமே, 192

ஆகுமே அடிக்கடிதானீரே போகுமனலேறியுதிரத்தில் கணப்புக்
காணும் வேதுமேயுடம்பெல்லாம் கனத்ததுவேர்வை மேகபித்தநீர்தாக
ம் தொண்டையரிகுரலாம்போகுமே தாதுநஷ்டநித்திரையில் கழியும்
பெண்கள்சென்று அநுபோகஞ் செய்வாற்போலே சாகுமேயகாலோடு
கையசைந்துநொந்துசார்ந்த பித்தநித்திரையில் கனவு மாமே 192

சுளுக்காணுமேகத்தாலித்தனையுமாச்சு கைக்கடங்கா நோய்களெல்லா மூன்றால் சொன்னேன்விணுக் காணும்விந்து நஷ்டமாத்திரையைச் சொன்னேன்மேகத்துக் காதியென்ன சொர்னம் சொர்னமனுக் காணும் வங்கத்துக்குந்கெடுத்து தென்னமப்பிரேகவங்கம் வெள்ளிபவழமுத்து - யிணுக்காணும் பிள்ளையெல்லா மேகத்துக்குப் பிலத்ததல்லால்தாது நஷ்டம்வருகும்வாறே, 191

வாருணமாத்திரைக்குப்பஞ்சேர்த்து மைந்தனேவிறைபிசினுங் கிழங்குபழமாவும்-கூரானசுவர்க்கங் கூடடியாட்டிகொடுத்திடு வாங்கிப் பசும்பாலில் குடித்தாயானால் - மாருதமேகமெல்லா மகன்றுபோகுமப்பனே தசவாய்வு அபானம்புக்கு – வீருணமேகமுடன் வாய்வுபோனால் விந்து அஸ்திவேகாது குளிரும்பாரே. 195

குனிந்துவருஞ்சந்திரனைப் போலாந்தேகங் கொப்பளித்தவிந்து வதுசிரசிவேறு - மளிந்துபோங்கன்னியர்க்கு வுண்மேலாசை ஐயையோ போகம் விடாதருமைமெத்த - களிந்துபோம் பெண்களுன்னைத் தொடுமுன்போகங்கழண்டு விட்டால் கன்னியற்குமனம்வெறுப்பாம் - அளிந்தவிந்துகட்டிநின்று அனுபோகிக்கில் ஆசையுன்மேலனுதினமுமகலாதென்றே 196

ஆசையாங்கன்னியர்க்கு வசீகரமுமுண்டாமதிமோகி மோகனயாமளைப்புஞ்சித்தி - பூஜைபண்ணி மோகினியைத் தியானம்பண்ணிப் புகட்டிவிடு குளிகைதனையாவின் பாலில் - பாசையிலே பரிபாஷை நூல்தோறு முண்டுபடை பொறுக்கப்பதி யிருக்கமுன்னணியும் பின்னும்- பேசையிலேகருமனைப் போலொன்றுமில்லை பெரிதான அறுநூறும் பேணிப்பாரே, 197

## வயித்திய சாஸ்திரங்கள்

அறுநூற்போலொரு நூறுமுலகிலில்லை யழகானயிந்நூல்தானறுநூறப்பா - பெருநூல்நா லாயிரந்தன்னூறுண்டு பிதற்றுதே ஆயிரத்திருநூர் சூட்சம் - வருநூல்தான் முன்னூறு செந்தூரமாகும் வழங்குகின்றகர்மகாண்ட மூன்னூற்சொன்னேன் - கருநூல்கானூறு பங்காய்ப்பிரித்துச் சென்னேம் கர்மகாண்ட முன்னூறு பின்முன்னூறே

மூன்னூறு நூற்றைம்பது மன்பதுநூந்தான் மூறையாக விருநூறு மூன்றுங்காண்டம் பின்னூறு மூன்னூறு நடுவில்நூறும் பேசாதே யெண்ணூறும் பிரிந்தேதனுலா யன்னூல்தானிருநூறு மூலிகில்நீறும் அழகாண சூஸ்திரந்தான் மூப்பத்தஞ்சு - தன்னூலாய் பின்னூல்தானெறுனூறிந்த சாஸ்திரத்தில் வெகுவிபாஞ்சார்ந்துபாரே. 199

பாரினில்தானென்பதுண்டு பார்க்கவேணும் பழக்கமில்லை தேசத்திலின்னூல்ரண்டும்-பார்கொடுப்பார்குகைதனிலே யிருக்கு நூலை யதிசயந்தானறுனூறு மெண்பதுபேபோதும்-பேர்தொடுப்பாய் ரண்டுக்ஷம் பெருநூலாதி பிரபலமா லட்சமதைப் பாதியாக்கி - கார்கொடுத்த மழைச்சாரல் பேய்ந்தாப்போலே கரையற்ற காஸ்திரந்தான் கண்கொள்ளாதே. 200

ளொளாதே பெருநூல்தான் டதிறுயிரத்தில் குளறிவைத்தேனுடியுடதாரணியின் போக்கு-கள்ளர்வாபுலியை ீகுத்துவென்று காட்டிவிட்டேன் பொருள்களொன்றும் காணுவாறு - விள்ளாதே நூல்கோர்வை கிட்டிற்றேனுல் விதியாளியயித்தியந்தான் பென்மேலும்பார் - ளள்ளான சிறுவிரைக்குள்தயிலப்போல வெடுத்ததுகை யாயிரத்தன்னூரும்பார்த்தே. 201

பார்த்துநன்றுய்ச் சுருக்கிவிட்டேனறுநூறு மூன்னூல் பார்மகனே ஆயிரத்திருநூறும்பார்-சேர்த்துநன்றுய் விரித்தொடுக்கித்திறமாய் பாடி செத்தபிணமெழுந்திருந்து திரும்பிப்பேசும் - கூர்ந்துநன்றுய்ப் பாடிவிட்டேனறுனூறுகுகைக் கல்லைத்துலைத்ததிலேகூர்ந்துவைத்தேன் கோர்த்துவிட்டேனெண்பதுதான் சூக்ஷாசூக்ஷங்கூறினனூல் பார்க்கவுந்தான் பெருநூல்பாரே. 202

பெருநூலில் குறக்கிவைத்த சாஸ்திரத்தின்பேர்கள் பிறபலமாமாயிரத்து ஐந்நூறென்று குருவினமாஞ் செயமூரைக்குமாசான் வேண்வேண்டாம்குற்றமில்லை ஆயிரத்திருநூற்றென்று - திருவிளக்காமேற்றிவைத்ததிபமொன்றில் வெட்டிகொளித்திருப்போல் கர்மகாண்டம்-வருவினையால்வியாதிவந்தால் வகையாய்த்தீர்ப்பான் வாதிமகன் மருந்துசெய்வானெண்ணூற்தானே. 203

எண்ணூற்றிலேம்பதுதான் குருவாய்ச் சொன்னே னெறிதப்பாநூற்றைம்பதுக்கு மிதுதான்வேணும் - மூன்னூற்றில் செந்தூர மூறை

யாய்ப்பாரு முன்னூலை செய்தவனே முசியானாதி - அன்னூலை குறுக்கியப்பா முப்பத்தஞ்சாயறைந்து விட்டேன் நீற்றினமாம் வெள்ளையாக - இன்னூலில் வெள்ளைவைந்தும் பூபதியாய் விட்டேனினுக்கீடு வொன்றுமில்லை சிவன்றான்பாரே.

பாருநீமுன்னூல்தானறுநூறென்று பாடிவிட்டேனாயிரத்தன்னூற் சூஸ்திரம் - சேருநீயதைகுறுக்கி ஆறுபத்தாய்ச் சொன்னேன் செகத்திலேகிட்டாது அதிகமெத்த - கோருநீ சமுத்திரத்துக் கொக்குஞ் சாஸ்திரஞ் கூறிவிட்டேன் குருபுடிக்கச் செய்நீர்திநீர் - வாருநீர் சரக்கையெல்லாம் நீற்றுநீறு வரிசையாம்ப் பிலமடக்கச் செந்தூரமாமே 205

மடக்குமே யந்நூலறுநூறம்பார்த்து மைந்தனே மருந்துசெய்ய வகையைக்கேளு - கிடக்குமேவியாதியெல்லா மென்றுபோம் கீர்த்தியுமோமெத்தவுண்டாங்கிளைகள்தோறும் - நடக்குமே வயித்தியந்தான் சொன்னபடிகேழ்க்கும் நாட்டிலித்தநூலில்லை நடப்புக்கேதான் - குடத்தில்வைத்த விளக்கெல்லாங் குன்றிலேத்துங் குறைப்படரே நூலமைந்தால் கொடுக்கொண்ணாதே. 206

ஒண்ணான சீஷனுக்குக் கொடுக்கவேணும் - உலுத்தர்வந்து யெதிரிட்டால் செயிக்கவேணும் - கண்ணான சூத்திரத்தைக் காட்டாவண்ணங் கபடாகச் பையிலேதான் போடவேணும் - மண்ணானத்தை வாரிவாயில்போட்டு மடையாபோ வயித்தியஞ் செய்வார் நூலில்லாமல் வண்ணானைக்கூட்டாமல் வயித்தியமேசெய்தால் வாதிமகனல்ல வல்லமாடுதானே. 207

மாடாகத்திரியாதே நூலைப்பாரு மதிகெட்டசண்டாளர்வருமே பாவம் - திருடாகவயித்தியமே செய்யவேண்டாந் தீரும்நோய்தீராதாண்டும்பாரு - குருடர்களாய்க் கிணற்றில் போய்வீழ்குமாப்போல குற்றமிகவந்துவிடுங் குடிகட்கெல்லாம் - பொருளாசை மிஞ்சிவிட்டால் நரகமெய்தும் பொல்லாதாரண்டுலகோர் பேசுவாரே. 208

## தேசாக்ஷூரிபூபதிமாத்திரை

பேசாமல்சொல்லுகிறேன் பூபதிதானென்று பிணந்திரும்பிப் பேசுமடாமருந்துகேளு - ஆசாணும் சூதம்லிங்கம் லோகவங்கம் அப்பி ரேகம் சலசத்து அறியின்தேவி - வீசாதே ஒருத்தருக்கும் கெவுரிகந் திவிருது பெற்றதாம்பூரமாம் பத்துமாச்சு - கூசாதேசெந்தூரம் புகழு ஞ் சொன்றுக்குப் பிவைப்புடத்திலும் நீவைத்தெடுத்துக்கொள்ளே.

எடுத்துநீ யண்டெடைக்குப்பாதிசூத மென்மகனே சூதபெடை பாதிபீரம் - விடுத்துநீ பூரமென்றால் ரசகற்பூரம் வெற்றிபெலக்குப் பிவைப்பேவேணும்வேணும் - கொடுத்தநீ பூரமெடைபாதி வீரம் தொள்கியொக்கக் கல்வத்திலரைக்கும்போது - தொடுத்திடுநீவெண் காரந்துருசுவெள்ளை தோடுடைத்து நஞ்செடுத்தவாளஞ்சேரே. 210

சேரப்பாறுன்மருந்துக் கிடையேகேளு செந்தூரம் பத்தாகுமா ற்றெட்டேமுககால் - தாரப்பாதுரிசியொன்று காமமொன்று துடிக் காணவாளமொன்று ஆரக்கேளு -பேரப்பாரண்டு பத்துவொன்றே முக் கால் பிலக்கனன்றுப் வெடியுப்புநீராலாட்டி - காரப்பாவாய்கண்ட கலசத்திலிட்டு கைவிரலால் செம்மாதே கம்புகொண்டு செம்மே. 211

செம்மையிலே தொட்டுவிட்டா லுடம்புகளில் பாதிசுட்டாக்கா லாறிவிடுமிதுவாராது - கம்மயிலேமேலோடு தட்டிமூடி கவசமிகுச் சுண்ணாம்புசீலைசுத்தி தம்மையிலே தூர்கனத்ததாழி யொன்றில் காரி யுப்பையரைத்து நன்றாய்க்கையால்செம்மி - னம்மையிலே தாழியுட் குள் நாலங்குசம் நலமாகக்கலையுமதை நடுவில்வையே. 212

வைத்ததின்மேல்லேறுப்பை வாரிச்செம்மிமைந்தனே மறுதாழி கவிழ்த்துமூடி - நைத்ததின்மேல் சந்துவாயிருகச் சேர்த்துநாலாறு சீலைசெய்து அடுப்பிலேற்றி பதத்திலே தீயெரிம்பாய்த் தீபம்போலப் பக்கத்தில் பரைபூசை பாங்காய்ஞ் செய்து - கைத்ததிலே முத்தியு மூன்றுசாமங் கைம்முறையாய்க் கிட்டிருந்து காத்திருந்தே. 213

காத்திருந்து யெரித்தகவுந் சோம்பிணுக்கால்கைப் பூத்தாலசடு வருங்காணுதொன்றும் - பார்த்திழுந்து ஞானத்தகண்மையச் செய்தா பழுதுவந்தால் திருப்பவுமோ பருவமாகும் - கூத்தறிந்து தொழில்களை

த்தான் றெக்ரேறடொன்று குறைக்கிறதுங் கூட்டுறதுங்குறிப்பாய்ப் பார்த்து - ஏத்தறிந்தால் செந்தூரமேல்லாழித்தூரிலென்மகனே ரூபாய் போல் வெளுத்துப்போமே, 214

வெளுத்துவந்த பதம்பார்த்து யிறக்கிப்போடு வெந்தசட்டி யாறு முன்னே திறவாதேகேள் - பளுத்துமெள்ளவே யிருந்தால்பாரான் வாதிபடுபாவி செய்ததொழிலாற்பறந்துபோகும் - கொளுத்துநல்ல செந்தூரம் வெண்சிவப்பாய் யிற்குங்கொட்டி நன்றாக் கலுவத்திலிஞ்சிச் சாற்விட்டு - இளுத்துமைபோலாட்டியதை ஆலம்பழம்போல தை யுருட்ட திசாகூஷரியாம் பூபதியென்றேதே, 215

ஓதிடுவாய்த சாகூஷரியாம் பூபதியையப்பா ஒருபணமானிடை கொள்ளு அனுபானத்தோடே வாதிடுவாய் வயித்தியனே வாவாவென்று வருகிறதோ காயறிந்து செய்ய வகையைக்கேளு - சூதிடுவாய் சூலை பதினெட்டுந்தீருஞ் சுணங்கன்போல் முடக்குமுட்டுளைச்சல் தீரும் - பாதிடுவாய்பாண்டுவுடன் குட்டம்போகும் பறக்குமடா சன்னி யெல்லாம் வலிகள்போமே,

வலியஞ்சும்சுணமோடு வாய்வுபித்தம் வாதமெனற தென்பதுவும் விஷநீரும் - சலியாதே காசமறுங் கரப்பன்புண்கள் சாயரட்டை குளிர்ந்துவருமிளைப்புத்திரும் - புலிபோலேபாயுமடா நோயைக்கண்டால் புகலாதேபுலமேத மருந்தினுடபோகதாம் - கலிகால நோய்க் கெல்லாம் ராமபாணம் காட்டினேனதுபோல வெகுபேர்க்குண்டோ,

உண்டென்று மருந்துசொல்லி யிபாதிசொன்ன லொருகோடி நூல்வேனு முறைத்தேன்முன்னே - கண்டுபெரு நூல்பார்த்து வியாதிகண்டு கூடசியிலேசொன்ன மருந்தெல்லாஞ்செய்தா, லுண்டுடுக்க வறுமையில்லை . லோகத்தோர்க - ளுன்கையில் மருந்துகொண்டா சித்தியுண்டாம் - பண்டுசெய் தவத்தால் முன்னூல்கிட்டும் பார்த்தவர்க்குமணிமந்திர வவிழ்தஞ்சித்தி. 218

சித்திபெற்றவயித்தியனைத் தேடார்லோகர் திரும்பொருத்தன் சொன்னமொழி கேட்டுக்கொண்டு பத்திவைத்து அலைவார்கள் பணம் போமட்டும் பார்த்தறியாப் பண்டிதனையிரும்போகும் - எத்தி எத்திப்பிழைப்பனென்று பொருளேவாங்கியென்ன செய்வேன் மருந்தினுல்

திராதென்பார் - முத்தியுமோயில்லையவன் மருந்துகொண்டால் மூதேவி வயித்தியனு முயிரும்போச்சே. 29

## வெள்ளைரச கற்பூரம்.

போச்சென்று மலையாதேமருந்தைக்கேளு புதுக்கலசந் தோண்டியைப்போ லிரண்டுவாங்கி - மேற்சென்ற தோண்டிக்குள் பூசக்கேளு மெதுவானபருத்திஇலை சாறுபூசி - வாச்சென்றரவிதனிலே யுலாப்போட்டுவட்டோடு தட்டிநன்றாயப்பிப்பில்வைத்துத் - தாச்சென்ற சூதமுமே பலமுநாலுதனிநெல்லிக் கெந்தகந்தான் பலமொன்றாமே. 220

தூவிமெள்ளத் தீயெரிக்க வுருகும்பாரு சூடியெல்லாந் துருகினுக்கால் சூதமும்வாரு - தாவிமெள்ள ஒழுகவிட்டு யிரும்பு கொண்டு தகரமாய்க்கிண்டி விடுபொடியாமட்டும் - தேவியொடு சிவனுமொன்றாய்ச் சேர்ந்தால்பின்கேள் - திராவகநீர்க்க பொடிகறுப்பாய்நிற்கும் - சீவிமெள்ளபுறண்டி நன்றாய்க்கல்வத்திலிட்டுச் சிதறுமற்பொடித்து வொருதோண்டிற்போடே. 221

போட்டுமேபூசினச்சாற் தோண்டிவன்னைப் பொருந்தவே கவித்து நன்றாய்ச் சந்துவாய்க்கு - யாட்டிநன்றா யுழுந்தரைத்து வெண்கருவை விட்டு ஆரவேசீலைசெய்வாய் மூன்றுமேதாதும் - வாட்டிநன்றா யலர்ந்த பின்புவாலடுப்பிலேற்றி வரிசையொற முத்தியு மூன்றுசாமங் கூட்டி நன்றாயாறிய பின்னிறக்கிமெள்ளக் முடந்திறந்துபார்க்கவுந்தான் பதங்கமாமே. 222

பதங்கமெல்லாம்வழித்து வைப்பாய்க்குப்பிகேற்றப்பகிரதியாந்தங்காசலக்குப்பிவேணும் - சிதங்கமெல்லாம் வராமல் சீலைமண்செய்சித்திரமா யுலர்த்துலர்த்தியேழு சாஞ்செய்து - விதங்கவிரல்ரண்டங்குலங் கழுத்துவைத்து வெளிபடுப்பில் திரிகொளுத்திமாட்டி சுத்தி - அங்கமெல்லாம்வாராமல் வெவுபார்த்துவப்பனை நீணர்விட்டு விரலால் தட்டே. 223

தட்குவிடுங்கழுத்தரித்தாற் போலங்குப்பி தனிபதங்கம்வாரியிட்டு தழிக்கொள்ளே - கோட்டிவிடுரண்டங்குல மணல்பரப்பிக்குறாந்தூசி தன்னில்நடுகுப்பிவைத்து - வட்டுவிடுசுத்திமெள்ள மணலைநீதான் - வீற்றிருந்தகுப்பிக்குள் விழுமொகாண்ணுது - சுட்டறுத்த குப்பி மட்டுமிட்டுமைந்தா சுந்தாஞ்சேர்வாலடுப்பிலேத்திடாயே, 224

ஏத்திநன்றாய்ச் சிவகாமி பூசைசெய்வாயென்மகனேவாமத்தால் தொட்டுப்புரோக்ஷி - சாத்துநன்றாய்ப் பரிமளங்கள் தூபதீபஞ் சந்திர கலையியங்கிவரில் வாமப்பூசை - பாத்துமட்டாயெரித்து விடுமுத்தியு மெள்ளபதங்கமெல்லா முருகிகுப்பிபண்டிக்கொள்ளுங் - கூத்தறி வாய்த் தொழிலொன்று சொல்லக்கேளு குப்பிக்குள்பதங்க மதுவுரு கும்போதே. 225

உருதிவரும்பதந்தனிலேசிலாரை கைவிட்டாலுருளாமல் குழம்பு போல்நிற்குநேரம் - சொரிகிசனமதையெடுத்துப் பொடித்து மாட்டு சுத்தவெள்ளைபடிகமெனக் கேங்காய்ப்போலாம் - வருகுசிள மன்றி வைப்பார்லோகத்தோர்கள் வாய்ப்புண்ணுமுமிநீர் சத்தமிறங்கொட் டாது - கருவிதுதான் சுக்கிலத்தில் மறைப்போயில்லை காட்டாதே குளிர்ந்தபின்பு உடைத்துவாங்கே. 226

வாங்கிடுவாய்சுருக்கு மெத்தரசகற்பூரம் வைப்பரித்தால் வாதி யவன் மருட்டோயில்லை - தாங்கியந்தகற்பூரம் கோய்கள் தீர்ந்தால் திருகாதுவாயீறு கட்டொண்ணாது பாங்கறிந்துசெய்தவனே வயித்தி யனவான் பாரினித்தான் சொல்லுகிறேன் பதங்கப்போக்கு - ஏங்கிநி ன்றரசஞ்துதான்பலனோ ரண்டுவுத்தகெந்தியரிதாரம் வெள்ளை வீரம். 227

வெள்ளையென்றவீரமுடன் துருசுகாந்தம் விசைபான கெவுரி லிங்கமஞ்சேசிலையும்நேராய் - கொள்ளையப்பாபத்துவகைமருந் தொன் றுக்கு கூறுவேன கழஞ்சரண்டு கல்வம்வைத்து - பிள்ளையுந்தாய் பொருந்திறற்போல் தாழிரண்டில் பிலமானதாழியொன்றி லுப்பரைத் து - செம்மியுள்ளை விரலஞ்சதுதான்செம்மி உத்தமனே மருந்தரைக்க வுபாயங்கேளே. 228

அரைக்கவுமோ வெண்கருவைப் பீங்கானில்விட்டுவர்க்கம் பால் துளிவிட்டால் தெளிந்துசலமாகும் - கரைக்கவதில் விட்டாட்டிக்கு கையும் சில்லுங்கனமாகச்செய் துலர்த்திடிப்பில் நடுவேவைத்து - துரைக்குருவாம்ருதமதைக்குகைய தனிவிட்டு தூரந்திரமாய்ச்சில்லு மூடி தூசியில்லாமப்பை - நிரைக்க மணியாய்ப்பொரிக்கிக் குகைமலேப் பாநிறைவிட்டுயெட்டங்குலங்கவிழ்த்துமூடே. 229

மூடுகின்ற தாழிக்குள்கரிப்பான் சாற்பூசிமூறையாகவஞ்சுதா மூலர்த்திநன்ருய் மூசிசாடுகின்ற சத்துவாய்க்குச்சீலைமண் செய்சமர்த் தாகவேழுகாஞ் சார்ப்பாய்ச்செய்து வாடியுலர்வெடித்திடத்தில் மறு படியும் மண்ணை வரிபாகப்பூசுலர்த்தி வாலடுப்பிலேற்றி ஆடியாவணி புரட்டாசி ஆனிஅப்பனே யெரிப்பு முறைக்கிதுமாதம்நாலே. 230

நாலெனவேசாமமெரி மூத்தியு மட்டாய் நன்ருகுங் கற்பூரங்களி நிறம் பொலப்பா பாலைனவே வெண்சிவப்பாய் நிற மமாகும் பதனமா யிறக்கி மெள்ளவழுத்துக்கொண்டு நாலலையுங்கசக்கி மெள்ளக் குடித்து விடும் பூரமகாலாந்தகெவுரி ரசக்கற்பூரம்பேர்தான் ஊலெனவே வரும் நோய்க்குயிலேயொருகழஞ்சி யுருதிபெற முன்வெள்ளை கற்பூரற் கழஞ்சே. 231

கழஞ்சிரண்டு மெடுத்துமைபோல் பணவிடையாங்தேனில் கருப் புட்டிசர்க்கரையாலவெண்ணெய் பொரிமாவில் சலந்திரண்டு வோடி விடுமறைப்பாகச் சூலைசாருமேகுட்ட முடன்சாந்தமேகம் களைச்ச வில்போல கூன்முடக்கு வயிறுவலி குன்மவாதமென்ற விஷநீரால் தடிப்புற்றுவிரியும் விளைஞ்கிவந்த நோய்தீர்க்கும் விரிவுமெத்தவுண்டு வினையறுகும் வயித்தியர்க்கு விதித்ததிந்தநூலே. 232

## நூல்பார்க்கப்புத்தி

நூலென்ருலருமைமேத்த நுழைந்துபாரு துண்ணிமையாய்ச் செய்தொழிலு முறையுந்தோனறும் நூலென்ருல் கருவுஞ்சாக்குத் தோறும்நூலுக்குள்சார்பறிந்து ஆட்டத்தோன்றும்சருக்குநூலென்ருல் வகைவகையாச் செய்யத்தோன்றும் நூலெழுதி வைப்பார்கள் மையி டாமல் நூலென்ருல் புஸ்தகத்தைச் சேர்த்துச்சேர்த்துநூலேழுதி வைப்பார்களிறந்துபோவார். 233

இறந்துவிட்டாலே துண்டாமண்ணுண்டாச்சு யிந்தறிவுபின்வ ருமென்றெண்ண வேண்டாம் - மறந்திட்டால் நூல்பார்த்து மகி மையென்னமகத்துவந்தா னென்னவிதுமாடென்பார்கள் -நிறைந்திட் ட வேதாந்தம்ரண்டும் நிற்கையிலுமிருக்கையிலுமநடக்கையிலும்பாரு- திறந்திட்டமருந்துணர்ந்து சித்தாந்தத்தில் திறந்திட்டால் வேதாந்தந் திறமாங்காணே. 234

## நீலகண்டவாலேரசகற்பூரம்.

திரமானபதங்கமொன்று சொல்லக்கேளு சித்தர் செய்வாரிவிக ள் செய்வார்மற்றோர்காணேன் திறமானலிங்கமது குப்பியாகசிறுத்திடு வாய் நாலுபலம் நருகிக்கட்டி - அறமான முலேப்பாளால் சுருக்குதாக்கி யனல்முகத்தில் கால்ப்படியிமானபின்பு தியமான தாழிரண்டிலொன் றுக்குள்ளேகதனிமூலிசித்திரமாஞ்சாறுபூசே. 235

பூசிடுவாயேழுதரம் பொட்டில்லாமல் புத்தோடு மூப்புசமனிடி த்துமைமேல் வாசிபெறத்தழிக்குள் சொரிந்து செம்மிவுவானசி த்திர மூலிப்பொடிதூவி காசி புகழின்சாக்கு அரிதாரம் வீரக்கூடியும் கெந்தி மனோசிலேயுங்கற் பூரமரண்டு தோசிகளாம்வயித்தியர்க்குச் சொ ல்லப்போமோ துரிசவெள்ளை கெவுரிசினம்துத்தநாகம். 236

நாகமுடன் வங்கம் வெடியுப்புமுவர்ப்பீவும் நலமான சூடன்பதி னைஞ்சுமொக்க பாகமுடன் சரிசமயனுக்க் கழஞ்சிரண்டாய்ப் பழச் சாற்றிலாட்டிமெள்ளப்பருமணியாயுலர்த்திவேகமுடன்சுருக்கிவிட்ட லிங்கத்தில் விரவிவெற்றிப் பெறுந்தாழியுப்பில்மேல்வைக்க கேளும் - தாகமுடன்பரப்பிநன்றாய்த்தாழி யுப்பிலதைவேளைச்சாற்தெளித்துத் தாழிகொண்டுமூடே. 237

மூடுவாய்முன்பூசி யுளர்ந்த தாழிமுசியாமல்சீலேமண்செய்துலர் த்திசாடுவாயடுப் பேற்றிக்காடாக்கினிதான் ரண்டுசெடுதியாய்க்கமலம் ரண்டுதீபமரண்டு போடுவாயடுப்பேற்றி யெரித்துச் சாமம்பூசைபண்ணி யிறக்கிடுவாய் நீலகண்டவாலே கூடுவாய்மருந்து நிறங்கருஞ்சிவப் பாம் வர்ன குருவாதுதான்சேனியா குழம்பைக்கேளே. 238

## அனுபானக்குழம்பு.

குளம்பென்ன சேங்கொட்டை பறங்கிப்பட்டை கூர்மையாம்பி ரப்பம்வேர்வகையொன்றுக்கு - வீளம்புறன்பல மொன்றுயிடித் து மைபோல்விட்டமைப்பாயாவினெய்ப்பால் மெழுகுபோல தளம்கியே பச்சரிசியிடித்துக்கொண்டு தாரணியில் நோயாளிக்கியும்வகைகேளும் - பழங்கனிந்த தேன்போலே குழம்புகாசுபாருநீ வெற்றிலேயில் வைத் துமீயே. 239

ஈவுமொருகாசெடைதான் பணவிடைகற்பூர மத்திச்சு கொண்டு விடுமருளாமறறுன் - மாவுபோல் பத்தியங்கால்பின்பு மூப்புமரு மாத் தம் வெந்நீரைபருகிக்கொண்டு - ஆவிபோல் ஆவினெய்மோரும் பாலும் மன்பான வெந்நீருமன்னம் பேரலும் - தாவுகின்ற மழைதுளிபோல் வாசங்கொண்டு சுடசுடவே பத்தியங் கொள்ளுப்பைக் கூட்டே.

கூட்டுவெதுகற்பூரம் வெந்தவுப்பு கொடுமையடா காரமெரிசுன்ன மாச்சு காட்டுவது கறிவகைக்குக்கால் திட்டமாமேகசடான புகைபிலை யும் புளியுந்தள்ளி-யூட்டுவது வயித்தியனேயாலுல் கோளுவுலகத்தில் பிர்மாவென்றுரைக்கலாம்பார் - மாட்டுடனே செய்யாமல் செய்தாற் கேளு பாவமென்ன சென்மமென்ன செய்யும்வாறே. 341

லாறுனமருந்துக்குத் தீரும்நோய்கள் வயித்தியத்தி லடங்காது அறு நூற்றன்னில் - பேறுன வாதியென்ன பெருநீரேரி பித்தவாதி சிலேத்பனமுமதற்குள்விந்துப்-சேருகித்திசை யெலும்புரத்தம் வெந்து தீச்சுட்டாப்போல் விரலில் புண்ணுமாகி-தீராது வியாதி யென்பானேய் கட்கெல்லாம் திடமேறியுணர்ச்சியற்றுத்தடிப்புவீழ்ந்தே. 242

தடித்திடத்திற்றெனவெடிக்கும் புண்ணும்பின்பு தலைமுலைக்குங் குட்டமென்பார் கிரந்தியென்பார் - வெடித்ததொரு சிலேபதினெட் டுக்குட்டம்விரிவுபத்து வெள்ளையப்பாகறுப்புயெட்டு - படித்துரைக்கு அடிபிடித்தவாறுபோலே பஞ்சிட்டுப்பாறம்வைத்தாற் போலாம் நோய் கள் - அடிப்படையில் தனினின்று நீருற்றுமேலயழகான சுவர்விழுந்த வாறுதானே, 243

## கற்பூரங் கூட்டிக்கொள்ள மூதண்ட சூரணம்.

தானென்றமருந்து கொண்டால் நோய்களெல்லாந் தவுடுபொடி யாக்கிவிடுங்கற்பூரங்கள் தேனென்ற கற்பூறங் கூட்டிக்கொள்ள திற மான மூதண்ட சூரணத்தைச் சொல்வோம் - பானென்ற பத்துபல மிளகிளப்பா பச்சைபிஞ்சிச்சாறு தனிலூறப்போட்டு நானென்ற கற் பூர வள்ளிச்சாறு காந்தைகுப்பை மெனியுடன் கைவேளைச்சாறே.

சாறென்ற தஞ்சுவகைக் கரைப்படியாய்விட்டுக் தனித்தனியே யுலர்ந்தபின்பு மிளகுபலம்பத்தும் - வாறென்ற அமுரியொடு கோவின்

மூத்திரம் வரிகொட்டிக்கரிப்பனும் வெள்ளாட்டுநீரும் - பர்ந்தன்ற
தஞ்சவகைக்கரைப் படியாய்விட்டுப்பருமிளகில் விட்டுவற்றிப் பக்குவ
மானல்-வாறென்றசித்ரமூலிசங்க பிசங்குளிதமான விழிசங்கு குப்பி
போடஞ்சே.

அஞ்சாமல்தரித்திடித்து வுலர்த்திவெவ்வேறே அதிமதுரந் திப்பி
லியும் மக்கிராகாரம் -பஞ்சாகும் சடாமாஞ்சில் அரத்தையேலம் பத்
திரியுஞ்சாதிக்காய் கிராம்புஓமம் - தஞ்சாகேவால்மிளகு நறுக்கி மூலம்
துடங்குமிரு சீரகமுஞ் சுக்குநோய் - மிஞ்சாமல் வகைக்குநாற்பலமே
கூட்டி மேலான மருந்திரண்டுமிடித்துத்தூளே.

தூளாக யிடித்துவடிகட்டிக் கொண்டு தூய்பாவி னெய்கழஞ்சில்
சூரணத்தைக்கேரு - காளேகே வெருகடியே பிரட்டிப் பூரந்தன்னில்
யணம்போலவைத்துநீ கொண்டையானல் - பாழானவிபாதி யெல்லாம்
பறந்துபோகும் பரப்பிர்மகிருபெல்லா விபாதியெல்லாம் ஷோளான
தொன்றுமில்லை குட்டஞ்சூலை குடிகெடுத்த குன்மம் வாய்வு குட்டம்
போமே. 217

போகுமேவாதமென்றமுடக்குத்தி நம் பொள்ளாத கிரந்திபுண்கள்
கணப்பானங் கொண்டு - சாகுமே நீராம்பலிங்கரிசூலை தனியாதம்
கோதரமும் யோனிபுற்றும் - வேகுமே பீனிசமாங்காசமெட்டும் விரி
வித்து உணர்ந்துவிடும் விஷநீரெல்லாம் ஏகுமேயென்னிறந்த கோடி
நோய்களெண்மகனே கற்பூரமின் னூல்தானே. 248

வயித்தியனுக்குப் புத்தி.

இந்தவகைகற்பூர மூன்றுஞ்சொன்னேம் இனியேது கற்பூர மிதி
ன்மேல்கேளு - மந்தகெந்தியாகாது வயிததியற்கு மறவிவந்து யிழுத்
தாலுமலைவீழுந்தாலும் - எந்தனைமய நினைத்துநித்தஞ் சாபம் நீக்கியெ
டுத்திட்டமருந்துவகை யெல்லாஞ்சுத்தி வந்தனைசெய்தாய் பதத்தைப்
பூஜைபண்ணி வடமலைவயிரவர்க்குஞ் சாத்துவோமே. 249

சாத்துவோ மேலாகக்குப்பிபண்ணி தளத்தில்ரின்று பதங்கிச்சு
வெள்ளையாகி - கூத்தனர்வந்தாலு மெதிர்ந்துநின்று கோபித்து வியா
திதனைப் பிடிக்கித்தின்னும் - பார்த்துநீயின் னூலில் மருந்துசெய்தால்
பழுதொன்றும்வாராது சாபமில்லை - காத்துமே முன்னுரைத்த நூற்
றைம்பதில்தான் தொடுகுறிபேகல் சக்காமுஞ் சிவமும்பாரே. 250

பாருநீ பூரணமாம் சூத்திரத்தில் பராபரமாஞ் சக்கரமோரண்டு மொன்று கூறுநீயிதில் நுழைந்தாலெல்லாஞ் சித்தி சுப்பிலைவத்த மருந் தெல்லாஞ் சிவப்போயாகும் - நேருநீ மருந்துகொண்டால் தீரவேண்டும் நீ கொடுத்தவிடமெல்லாஞ் சித்தியாகும் - யாருநீ சாபமெல்லாம் தீர வப்பாபருமாறுமந்திரமும் பின்னைத்தானே. 251

பின்பார்த்துமுன்செய்ய வேண்டுநூல்கள் பின்னு முன்னும்பாரா மல் பிழையேசெய்தால் - வண்பாவி கொடுத்தானென்றுலகோர் சொல் வாரந்தசொல் தவறுமல் தூலும்பாரு - கண்பார்த்துகைபார்த்து மூகத் தைப்பார்த்து கலந்துமவனனுபவித்த சொல்லுங்கேட்டு முன்பார்த்துச் செய்தவழி நடந்துபோனுல் முத்தியுடன் சித்தியுண்டாமோக்ஷத்தானே

## மோக்ஷத்துக் கெய்தும்வழி

மோக்ஷத்துக்கெய்தும் வழிமனதேகண்டால் முன்னோர்கள் நூல் தனிலே வாசித்துபார்க்க - பாசொத்தமனதை யொன்றில் பாயொட் டாமல் பக்குவமாய்ச் செய்து நன்றுய்ப்பாருமூக்கில் கூச்சத்தவொளி காணுங் குறியைக்கேளு குருசொல்லக்காணு மல்லாமல் மற்றோர்கா ணோர் நீச்சத்த அறுநூலில் நின்றுபாரு நேர்மையுள்ள குருமுகமா மிந்தநூலே, 253

இருந்தசபை சந்திரகலை யிருந்திடத்தில்பூசி யெத்தனையென் றெண்ணுதே தூசிநேர - வருந்தசைவான் தூசியென வாசிநாலு வான் முட்டிமேலெழுந்து வருதும்நாசி - பெருத்தசபை யொட்டிரெட்டிப் பூசித்தாக்கால் போதுமப்பாபெந்தனை யோகாலம் வாழ்வாய் - குருந்த சைவைகும்பியதில் யொன்றேகோம் கூத்தாடும் ரேசகத்திலரைத்தான் காணே. 254

நாணிந்தப்படி நிறுத்திப்பார்த்தால் போதும் சுழிவாசியுள்ளடங் கித்திரை நூல்போம் ஊணிநேமனதையெங்குமோ டொட்டாம லொரு தரந்தானந்தியொளிவுள்ளே பார்த்தால் - பூணந்த வொளிகாணும் ரண்டுமொன்றில் பொன்னுருகியாடுகின்ற மணிபோலாகும் தோணிந் த மணிக்குணின்று துதித்தால்போதுந் தூலமென்ற வில்வாழ்வுக்கு தான்பாரே. 255

இதுபார்க்கமந்திரமுங் குருவுஞ்சொன்னேனென்னைப் போல் கொங்கணரும்சட்டைநாதர் - சரிபாரக்கத்திரு மூலரன்னூற் ஞானம் சாத்திரந்தான்கடைக் காண்டம் அன்னூற்சூத்திரம் விதிபார்க்கப் பூரணநூல் பின்னூற்ஞானம் வெளியாகச் சொல்லிவிட்டோம் நால் வருமேகூடி - பொதுவாகத்துறவிக்குஞ் சமுசாரிக்கும் யூரணத்தை யாரென்றுபுகன்றவாறே. 256

வாறுனமுன்னூலைப்பார்த்து ஞானிவருந்திமெள்ள வாசியைத் தான்குருகைக்காட்டப் - பெருகப்பார்த்து மோட்சமடைந்தார் கொஞ் சம் பின்னையெல்லாம் நேர்காணூர் பிழைத்துச்செத்தார் - கூறுனகுறி காட்டார்தமோ வென்றால்குறும்பர் மெத்தவுண்டுலகில் ஞானிசென் றால் - வீறுன சமுசாரிக்கிதுபாதையென்பான் விடியுமட்டு மூச்சடக் கிச் செத்தார்தானே. 257

செத்துதான்வாய்வடக்கிச் சகிதமேகம் சீர்வாய்வு பானவரை முட்டிச்சாடி - பெத்துதான்பேறனவே நோய்கள்மிஞ்சிப் பின்பார்த் தால் மோட்சமென்று வில்டோர்கோடி - கைத்தபுளியப்புடனேயன் னங்கொடு காமலீலையாகதொடகுஞ் சமுசாரிக்கு - முத்தியுடன்கற்ப முதலெல்லாந்தள்ளிமூச்சாடா திருப்பவர்க்கு வழியொன்றும்மே 258

ஒன்றாகச் சொல்லிவிட்டேனூலைப்பார்த்து ஒகோகோ அலைகி றார் நூலைவைத்து - அன்றுடம்பிறுக்திச் செனிக்கும்வகைபாரு அலை யாதே பெருநூலுமொத்துப்பாரு குன்றுமல் மலையேறிக் குகையைத் தொட்டுக்கூப்பிடு அலறியுந்தான் பிழைப்பைவிட்டு - பெண்டாசை பிள்ளைவிட்டுப்பசியுமிஞ்சிப் பிழைக்றியாப்பித்தர்களே பெருமை போமே. 259

பெருமையென்ன ஞானியென்பான் கற்பங்கொள்வான் பிடியரிசி பொங்கியுண்பா னுப்பில்லாமல் - ஒருமையென்ன கொடுத்ததெல்லாம் வாங்கிப்போவான் ஒகோகோகுடிசையொன்று கட்டிக்கொள்வான் - குருமையென்னகுகையினுள் போவோனென்பான் கூடழியாதொரு நாளுமிருப்பேனென்பான் - அருமையென்ன ஆரொருத்தர் பொசித் தார்க்கெல்லாம் அண்டமைத்தோர் இறந்தவுடலறிந்தார்காணே 260

அழிவதெல்லாம்பிரந்தவுட லழகேயென்றால்ப்பனே யூன்பிணு
மேஅல்லாதுண்டோ, அழிவதிலேபழுபழுப்பாகாணக்காணக்கண்டவரும்
துடிதுடித்துந்துக்கொடாதென்பார்கள் - ஒழிவது முன்சுழி குனையி
லோடிப்பாயுமோ வெட்டுமீரெட்டு நால்வரையுங்கட்டி - வழிவருமுன்
கட்டி மனதடைபட்டோடவாசியிது அலையாதே மலைபோவென்றே.

மலையாமயில்லறத்திலிருந்துக்கொண்டு மக்கள்பெண்டீர் சுத்த
முடன்மகிழ்ச்சியாகத் - தலைபாதேவாள்பெருச் செல்வமாகித் துறப்
போர்க்குமிறப்போர்க்குமீவோனாகில் -வலையான பாசவர்க்கமிருந்து
மாய்வைவானறம்போலறுத்தவற்கு வருகுமோட்ச - மலையாதே யூன்
டியென்றும் ஞானியென்றும் குதியென்றும் பரதேசியாகத்தானே.

தானென்றுமலைத்ததினால் வருவதேது சமுசாரஞானிகட்கே
மோட்சமெய்தும் -கூனென்று முடவனென்றுங் குருடனென்றுங்குலை
யீனன் செவிடுமையாகாதென்றுங் - கோனென்றதத்துவங்கள் குறை
யில்லாம் குடிகெடுத்தவியாதியினால் கிடைந்திடாமல் பானென்றசந்தின்
போல் தேகமுண்டாம் பரமோட்சப் பூரணத்தைப் பிடித்துப் பாரே.

## பாண்டரசகற்பூரம்

பிடிக்கவொருமருந்துசொல்வேன் பாண்டரகற்பூரம் பிறமான
சட்டிரண்டிலொன்றுக்குள்ளே -படிபடியாகையான் சாற்பூசிப்பூசிப்
பத்துவிசை யுலர்த்து கணமோலைபயாறு - லடிகனத்த கீழ்சட்டிக்
கரியுப்பு செங்கலானிரட்டை சரிசமனாய்பிடித்துச் செம்பிப் - பொடித்
தசட்டியுப்பையரை வாசிபோட்டுப்பூவரசின் ,பட்டைவெட்டிக் சீவிப்
ம்பாடே. 264

சீவியுள்ளேசிகப்பெடுத்துக் கெந்தகமுகோய்ச் சிறுதும்பைச்
சாறுவிட்டுவரைத்துமைபோல் - தாரநின்றதற்குகையும் சில்பிடித்து
வாட்டித் - தனிச்சாமங்கழஞ்சி பணிரண்டுவாங்கிக் காவியாங்கலுவ
மதிற்கெந்தகத்தின் றயிலங்கழஞ்சது தானுலுவிட்டு ரசமாளவாட்டி -
யோவியமாய்வழித்துருட்டிக் குகைகுள் செம்மியிந்த சில்லைமேல்க்
கவிழ்த்துயுப்பில்லைவே. 265

வைத்துமெள்ளகுகைமறைய உப்பைதூவி வளர்பிறைபோல்
மேல்சட்டிக் கவிழ்த்துமூடி - வைத்த செட்டிவளிம்புரண்டும் பொருந்

தச்சிலைபந்தடைமேல் வைத்து நல்லப்பதனமாகக் கைத்தடுப்பிலேற்றி முத்தீமூன்றுசாமங் கலகலெனவெறித்தாறியடுப்போடேதான் வைத்த சட்டி அசையாமல்திறந்துமேலே நவரத்தினம் வயிரமின்னம் சிவப் பதாமே. 266

சிவப்பென்னவெளுப்பட்சியிருக்கும்ரசபூரந் திருளாதாரசந்திரும்பிச் செனியாதப்பா பவக்குறையாமாற்றிவிடும்பன்றி முடிதன்னல்பத்தி வழித்கய்மிதனில் பொடித்துக்கொண்டு பவக்குறைநோய் குன்மங்கள் குட்டமலைபரைபாப்புச்சூலை முதலோடிப்போகும் தவக்குறையா ருள் மூலந்தண்டில் புண்கள்தடிப்பு வெள்ளைகரப்பனவண்டு சிலவிஷ ங்கள் போமே. 267

போகுமடா ரசநந்திபூரந் தின்னபுத்தி யுள்ளவாதி மகன னுப்பானத்தில் - சாகுமடா சிவியாதி யெல்லாம்பாண்ட கற்பூரம் சாத் திவிட்டேன்வா யீறுகட்டாதப்பா பாகுமடாபத் தியங்கள்கற்பூரவுப்பு பரிவானவெந் நீராம்புளியைத்தள்ளு ஆகுமடாபுகையிலை யுஞ்சிற்றின்ப மாகாயப்பனேயினிவேறே யறைபக்கேளே. 268

## காமகேசரிகுளிகையின் சரக்குசூரணம்

## சிவன்சூரணம் சத்தியின்பெயர்

அறைகிறேன்முன்னுரைத் தகாமகேசரிக்கு அப்பனேயிதன்சாறுக்கு பொடியைக்கேளு - பகருதே ஒருத்தருக்குமிந்த நூலில் பக்குவமும் கருகுருவுமினமுஞ் சொல்லேவன் - குறையாதே குளிகைபெண்டுபாவில் கொள்ளக்கூறிவிட்டேன் பொடியில்லாள் சுருக்கோயில்லை - துறையாக ச்சரிப்படவே நூலில்போட்டால் துன்மார்க்கர்க்கிந்நூல்தான் கொடு க்கொண்ணாதே. 269

ஒண்ணாணமதனகாமேசரிக்குப்பப்பா வுறுதியில்லை சூரணமே யில் லாவிட்டால் - கண்ணான மாத்திரைக்குப் போகம் விடா திருக்கு ங்கடல் பொங்கியணையுடைந்தாற் போலாம்பின்பு - பெண்ணார்க்கும் புருஷர்க்கு மப்படியேதின்றால் பேய்மக்காள் மேகமுண்டாமாசையாலே பூண்ணாதும்புரசிரசாய்ப்புமாகும் பொரிபட்ட பஞ்சதுபோல் வாயு வேமே. 270

வெந்துவிடுமெழுபத்திராயிரம்நால் வெள்ளெலும்பாம் ரத்தம் லற்றிக்கொரிச்சிமேகம் வந்துவிடும் வியாதியென்னப்பட்டதெல்லாம் வருவித்தால் குளிகையுடமதிமையேது சந்துசந்தாய்ப்பிச் செரிப்பு சொர்னபற்பம்சந் தூரியப்புரசம்விரைபிசினுங்கிழங்குப் பந்துயர்ந் தாப் போர்குளிகைலகிரியுண்டுபார் மகனேகுளிகைசிவம்சத்திபொடி கூட்டே. 271

கூட்டாமல் குளிகையைதான் பாலில்கொண்டா குடிகெடுத் தமேகமிதேதிஞ்சியேக - பூட்டிவைத்ததிறவுகோலைத் தேடிக்காணேன் புத்தியுள்ளால் சூத்திரத்தை தேடிபார்த்து - நாட்டிவிந்தக் குளிகை கொண்டால் மேகம்போக்கி நலமானமருந்து கட்டு வேகமேற் சூட்டி விட்ட சூரணமேயில்லாவிட்டால் சுருக்கில்லை வியாதிகளைத் தொடரா ரென்னே. 272

தொடர்ந்து வெடிவியாதிகளைத் தேகம்போன துரைமகனே சந் திரன் போலிருக்கவேணும் படாந்தபொடி சூரணத்தைச் சொல்லக் கேளு பருங்கிழங்காயிஞ்சிதனை மேற்றோல்சீவி விடாந்த வில்லைபாய் கருக்கிப்பாலில்வெந்து வெய்யிலுலர்த்தியிடித்து வடிகட்டிக்கொண்டு அடர்ந்து போங்கடைசரக்கு அமுதமாவும் அரத்தையேலம் வால்மிளகு மதிவிடையமாமே. 273

விடையாதேபத்திரியுஞ்சாதிக்காயும் வெற்றிலை யூறல்பட்டை கிரும்புசீரந் தடையாதே யதிமதுரமாஞ்சிசிறுதேக்கு தாளிசந்திறி பலையுஞ்சன்னயிலவங்கம் -புடையானகடகசிங்கி நருக்குமூலம் பூவான செண்பகப்பூநாகப்பூவுஞ், சடையாதேமகரப்பூ பரங்கிப்பட்டை சந் தனமுமுந்திரிகைபேரீச்சாமே. 274

ஆகுமேகசகசா நெல்குருவைபொரியும் அபினுங் கோரோசினை யும கத்தியாலும் - வாகுமே அரசவிந்தநாலுபழமூலர்த்திவகை வகை யாய்ச் சரக்குவகைகழஞ்சிமூன்றுஞ் - சாகுமேசட்டியதில் வெதுப்பிக் கொண்டுதவுடு பொடிபாயிடித்து வடிகள்செய்து - போகுமே முன் னிஞ்சிப் பொடியைச்சேர்த்துப் பிசகாமலிரண்டு மொன்றாய் சேர்த்துக் கொள்ளே. 275

சேர்த்துவொன்றாய்க் கண்டிடைக்குகாவிலொன்று பட்டைசித ராமலிடித்துவடிகட்டிக்கொண்டு தார்த்து சட்டிகாயவைத்து நெய்

தெளித்துதனிபறங்கிச் சூரணத்தைப்பொன்னிறமாய் வெதுப்பிப் பார்த்து அடிபிடியாமல் பதம்வவும்போதிறக்கி பருயிஞ்சிப் பொடியை நெய்யில்பதமாகவெதுப்பிக் கார்த்துவெர்ன்ருய் முப்பழமுந்திராட்சைக்கொட்டை பக்குவமாய்பேரீச்ச மபினுங்கூட்டே. 276

கூட்டியொன்ருய் மருந்தைபொக்க கூறியதோர் விரவிசிணியதில் நாலொன்றுசேர்த்து - மாட்டி யொன்ருய்மத்தித்து புதுகாகத்திட்டு மைந்தனேயடைத்துவண்டு கட்டிக்கொண்டு -பூட்டிவிடுசூரணத்தை வெருகடியில்பாதி உத்தமனேகுளிகைரண்டும் உமையாளின்பாலி - லாட்டிநன்ருய்ச்சூரணத்தை வாயில்போட்டு யதில்விடுவாயாசின் பாலந்திவெடிவாரே. 277

வேறென்னயினிசொல்வேன்மதனகாமா விந்தாகட்டு மாத்திரைக்கு விஷ்ணுசிவமொப்பாந் - நாறென்னஇஷ்டலீலை செய்தாப்போல சதாகோடிமாதர்களைச் சம்போகித்தால் - ஆறென்ன போகமடாவறத்திணேயெயாகுமடாங்காது புருடனுக்கும் பெண்களுக்குமெய்தான் - பேறென்னகுளிகையுடன் சூரணமேசேர்ந்தால் பெலத்துதடா தேகமினிப்பிணிகளெல்லாம்போமே. 278

போமப்பாயிருபொழுது மண்டலந்தான்கொள்ள புண்ணியருக்கெய்துமல்லால் மச்சோர்க்கில்லை - நாமப்பா சொல்லிவிட்டோம் காட்டிவில்லை நாகமணிகிரீடம்போல் நாவில் சொன்னேனுக் - தேமப்பா தேகமெல்லாஞ் சொர்ணமயமாகுஞ்சித்தி முத்தியுண்டாகுந்திறந்தான் பாரு - தாமப்பா மாலையால் நூலைப் பார்த்துத் தனித்திருந்துமருந்து செய்வாய் குருநூல்தானே. 279

## இந்நூல்கைம்முறைகுருநூல்போதுமென்பது

குருவாகும்நூலிதுதான் கைம்முறைக்குவேறே குருக்களென்று ஒழிவரை நீதடங்கல்செய்தால் - மருளாகத்திருடியே வயிற்பிழைக்கச் செய்வார் மலையேறியிருப்பவர்க்கு வருமோசொல்லு யருளானநூல் தானே யாதிகுருவாகுமப்பனே குருக்குருவுங் கைம்முறையுஞ் சொல்லும் - பொருளுனக்குப் பெலனுமாம்நூலைப்பாரு புத்தியுள்ள வயித்தியர்க்குப் போதுமிந்நூலே. 280

## கெங்காசல்குப்பியில் செந்தூரங்கள் வைக்கச்சுத்தி

போவதற்குமருந்தொன்று சொல்லக்கேளு புகழ்பெரியதுப்பி வைப்புச்செந்தூரத்தை - மாவதற்குக்கங்காசல குப்பிவாங்கிமணமணக்

கும் புத்துமியுஞ் செங்காரிசைமண்ணும் - ஆவதற்குபஞ்சுமொன்று யரைத்துச்சீலை யகம்புறமுங்கட்டி குப்பியடைக்கச்சுத்தி - மேவதற்குக்குப்பியாய்விட்டுக்கீழே மெய்யாக விரண்டுவிரல் கனந்தான்சுத்தே.

சுத்திநன்றாய்மேலிட்டுச் சீலைமண்செய்சுகமாக ஒன்றொன்று யுலர்த்தியேழு - பத்திநன்றாய்ப் பிடித்துப்பற்றி வெடித்திடத்தில் மண்ணபிசந்தடைந்துகுப்பிகழுதருக்கக்கேளு - மத்திநன்றாய்த்திரிகொளுத்தி சாத்திவாட்டி மைந்தனேசலத்தை விட்டுவிரலால்தட்ட - சத்திகொண்டுகிடாயறுத்த கழுந்தைப்போலகட்டுமுன்னே குப்பியைப் பார்த்துதிவாங்கே. 282

## குப்பிவைப்புரச்செந்தூரம்

வாங்குவாய்ச்சமதுவே பலந்தானுலு வாரசொல்லிச் செந்திபது பலந்தானென்று - யோங்கிநின்றகல்வத்தில் பொடிந்தெந்திந்தி யுறுதியாம் புத் தொட்டிலடுபில்வைத்து - தாங்கிவெள்ளத்தீபமென் யெரியும் போது தனித்தனியே கெந்தியதைவாரியோட்டல் - பாங்குபெறத் தூவியது உருகும்போது பதனமப்பாதீபிடித்தால் புகைந்துபோமே.

போமப்பாமருந்துபோ யுயிரும்போகும் புந்தியுள்ளான் தீப்பிடியாதோட்டின்மேலே - தாமப்பாதீயெரிப்பாய் அரும்பபோலத்தனியிரும்பு சட்டத்தால்கிண்டுகிண்டு - தேயப் பாகதுபோலுருகிநிற்கும் தீயமர்த்திச்சூதத்தை யொழுகவிட்டு - சேரமப்பாசட்டத்தால் கிளரிக்கிண்டு கொழுந்தீயாங்கைம்முறைக்குக் குருவிந்துவே. 284

குருவானரசத்துடனே சத்திசேர்ந்தால் கொடுங்கருப்பாஞ்சத்து மோட்டில்பிடியாமண்ணம் - பருவமதாயிளகிளகி யுதிர்ந்துகொட்டிபார்மகனே தீப்பிடித்துயெரிந்திடாமல் - உருவமெனச்சாத்தி வைத்தாப்போலிராம லுருக்குருக்கிப்பறண்டி யோகல்வஞ்சேர்த்து சுருபமதாங்குப்பிவாய்க்குள்ளடைக்கும்வாறு போலாச்சுத்திமெள்ளப் பொட்டித்தகுப்பிக்கடைக்கும்வாரே. 285

அடைவதுதான்குப்பிக்கு அரையேமட்டும் அடைத்தாக்கால் பத்திரமா யெடுக்கலாம்பார் - நடைப்பதுவேரண்டில் மிஞ்சுமருந்து மீறில்தனிக்குப்பி மருந்துருகில் வெடித்துப்போகுஞ் சடைவதுதான் வாரமலரையுமட்டுமறக்கின முந்தீயெரிவும் பதமுங்கண்டால் - விடை

யாதேபொருத்தருக்கும் நூலுண்டென்று விருதுபெற்ற நூலிதுதான் வெளிபோடாதே. 286

போட்டுவரைமட்டு மல்லாலதிகம்வேண்டால் புகழ்பெரிதாழியொன்றுபுதியதாகக் - கோட்டிநன்றாய் பண்கனத்துவெந்த தாழிகொண்டுவந்து ஆற்றுமணல்கொழித்துத்தூசி - மேட்டியாயூமச்சிநண்டுநத்தைபெதுமணலைப்பார்த்து மெள்ளத்தள்ளிப்போட்டு கூட்டிரண்டுவிரற்கிடைத்தான்தாழி நடுமையமறுமணலை பரத்தியதில் குப்பிவையப. 287

குப்பிமட்டுமணலையிட்டு நிறுத்திவாய்க்கு கூறுவேனோடுடைத்துமூடிப்போடு - செப்பியமுன்வாலடுப்பிலேற்றி கட்டைதீபமெனச்சாமமெரியப்பால்கேளுச் - தப்பிடாதேயெரிப்புங் கதம்பூபோலத்தனிகெந்தியுருகிநிற்கும் புகைச்சல்பாரு - அப்பிடாமலோட்டிவருமெழுகு பார்த்து அடிக்கடிதானெடுத்து மறுஓடுபோடே. 288

ஓடுமூடி திறக்கையிலே புகையுந்தீயு முற்றநூப்பி வாயில்வாரக்கண்டபோது - போடுமரிதார நிரைசம்பத்துக்கு பொருந்தினதுகாலரைக் கால்கழஞ்சேயாகுங் - கூடினதை யிவ்விதம்போல்ரசம் பெருகிக்குறையாமல் தாளகத்தைநிறுத்துமெள்ள - சாடிமெழுகெரியையிலேயுலைக்குறடுகொண்டு சதிராக யிருந்துகொண்டு தாளகத்லைதமாட்டே. 289

மாட்டிவிடுவரையரவாயோடு போடவேண்டா மைந்தனே தீயெரிவுமீறலாகா - யோட்டிவிடு குப்பியிற்குள்சிலாகை மெள்ளளயொதுங்கொதிக்கிகைநினைவாய்துளாவிசுத்தி காட்டிவிடுவிழிதிறந்து புகையுந்தீயுங்கடுமெழுகுபறிந்து குப்பியமைக்கும்வாயை ஆட்டிவிடுயடிக்கொருக்கால் சிலாகைவிட்டு அப்பனே தீயமர்ந்தாலோடுமூடே. 290

மூடிவைத்தஓடுநடு மெழுகொட்டாமல் முழுவெளுப்பாயிருக்கும்பதந் நீயைமாற்று - மூடிவைத்தால்சிலதுகுப்பிவாய்மூடாது முறைமுறையாய்ச்சிலாகைவிட்டுத் திருப்பும்போது - ஆடிநிரைகெந்தகம் போய்மெழுகுதீய்ந்து அடியிலேகாகரத்து சிவக்கும்பாரு - ஓடிமெத்தயெரியாமல் தீயைமெள்ள யுதிர்ந்துவிழுமேறினதுங் கருத்துப்போமே. 291

கறுத்துப்போமிடை குறையுஞ்சிவப்பும்போகும் கடுந்தீயாங்கைம் முறையும் பதமுங்கப்பில் - வெறுத்தீய்க்குச்சாமமது யாறேமென்பார் வெண்டாம் பார்பதம் பார்த்துயமர்த்தித்தீயை- அறுத்தடுப்பலாறவிட்டு யிறக்கிமெள்ள அகலமுள்ள பாத்திரத்தில் தண்ணீர்விட்டு - பருத்த மெள்ளமணலையிட்டு யிருப்பகப்பைகொண்டுபத்திரமாய்க் குப்பியெடுத் தோய்த்திடாதே. 291

தோய்த்துவிட்டால் செந்தூரமுதிருமப்பா துவைச்சலில்லாக் குப்பிபற்றி பிடித்துக்கொள்ளு - மாச்சுதப்பாசெந்தூரங்குப்பிவைப்பு அரைந்துவிட்டே னடக்கமப்பா வெளிவிடாதே -கூச்சமற்று வயிந்தி யஞ் செய்குப்பிவைப்பால் குறும்பா வயித்தியர்க்குப் பூசைசெய்தால் பாச்சுதடாவைப் பெரிப்புப்புடத்துக் கெல்லாம்பாலே யொடுநிர்வாணி பூசைதானே. 293

## குப்பிவைப்புச்சவ்வீரம்

தானென்றகுப்பிவைப்புச் சவ்வீரங்கேள் தனிசெங்காசல குப்பி சீலைமண்செய் - ஆனன்றகுப்பியடி ஆறஆற அப்பனேகழுத்துமட்டும் வலுவாய்ச்செய்து - கோனென்றகுப்பிகழுத்தொடித்து மெள்ளகுண்டு சட்டியடிக்கனமாய்வெந்ததாக - பானென்ற ஆற்றுமணல்பழுதுபார் த்துப் பதமாகத்தோண்டிரண்டு வாங்குவாயே. 294

வாங்குவாய்சூதமப்பா பலந்தானெட்டு வருகும்கெல்லிகெந்திபல மிரண்டுவாங்கி - ஓங்கிநின்றவோடுடைத்து வட்டம்போலே யுற்றகெந் திபொடித்து ஓட்டையடுப்பிதல்வைத்து-தாங்கிமெள்ள கெந்தியிட்டு யுருகும்போது தனிரசத்தை யொழுகவிட்டுக்கிண்டு கிண்டு - பாங்கு றெத்திரண்டு வொட்டிப்பிடியாமற்றுன் பற்றிவழுத்தம்மிதனில் கொட்டிக்கொள்ளே. 295

கொட்டிமெள்ளப் பொருத்துவாரித்தோண்டி யொன்றில்கிறவி ட்டுமேறு தொண்டிகவிழ்த்துமூடி கெட்டியதாயுறுந் தரைத்துச்சீலை செய்துசினம்பாலுலர்ந்தபின் புஅஞ்சுமண் ணுங்கட்டியரைத்ததின்மேலே மூன்றுசெய்துதனித்தகண்ட வாலடுப்பிலேற்றிமெள்ள குட்டிமெள்ள விநாங்களைத்திபம் போலக்கூட்டியெரி மறுசாமம் கமலமாமே. 296

